# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Tuesday, the 6th September 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I. QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Teachers (transfer)*

*451 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) இவ்வாண்டு வட ஆற்காடு மாவட்ட ஆட்சி மன்றத்தின் நிர்வாகத்திலுள்ள எத்தனை பி.டி. செகண்டரி கிரேடு, ஹையர் கிரேடு ஆசிரியர்கள் மாற்றப்பட்டனர்?

(ஆ) இவர்களில் எத்தனை பேர்கள் அவர்களாகவே மாறுதல் கோரினர்?

THE HON. SRI SUBRAMANIAM: (a) &(b) The time and labour involved in gathering the particulars will not be comensurate with the public purpose that may be served.

SRI S. M. ANNAMALAI: ஸார், மற்ற ஆண்டுகளைவிட இந்த ஆண்டு அதிகமான ஆசிரியர்களை மாற்றியிருக்கிறார்கள். சில அதிகாரிகள் வேண்டுமென்றே இவர்களை மாற்றியிருக்கிறார்கள் என்பதை சர்க்கார் உணருமா? இதைத் தடுப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்?

THE HON. SRI C. SUBRAMANIAM: நிர்வாகத்தில் மாறுதல் செய்வது அவ்வப்போது ஏற்படுகின்ற நிலைமையை உத்தேசித்துத் தான். அதிகாரிகள் வேண்டுமென்றே கஷ்டங்கள் கொடுக்கிறார்கள் என்று சொல்வது சரியல்ல. அப்படி ஏதாவது இருந்தால், சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவந்தால் கவனிக்கப்படும்.

SRI V. K. KRISHNAMURTHY: பஞ்சாயத்து யூனியன் அமைக்கப்படுவதன் காரணத்தால், அந்த யூனியனிலுள்ள ஆசிரியர்கள் அந்த யூனியனிலேயே பணியாற்றுவதற்கு வழிவகை செய்யவேண்டுமென்று ஜில்லாபோர்டு அதிகாரிகள் விண்ணப்பம் செய்தால் அரசாங்கம் அதை கவனிக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: பஞ்சாயத்து யூனியனில் இருக்கக்கூடிய ஆசிரியர்களை வேறு பஞ்சாயத்திற்கு மாற்றாமல் அதற்குள்ளேயே வேலை செய்யவேண்டியவர்களாக இருக்கிறார்கள். பின்னால் சங்கடம் ஏற்படாமல் இருக்க இவ்விதமாக ஏற்படுத்தப் படுகிறது.